திரிலோக சஞ்சாரி

# நாரதர்

உன்னத அறிவிற்கான ஆன்மிகஇதழ்

மலர் 2
இதழ் 3
2023

வாழிய குரு கௌராங்கர்
ஓம் தத் ஸத்

உலகம் முழுவதிலும் வசிக்கும் மனிதர்களில் தமிழை அறிந்து வாசிக்கும் அனைவருக்கும் எனது பணிவான வணக்கங்களை சமர்ப்பிக்கின்றேன்.

“ஓம் அக்ஞான திமிராந்தஸ்ய ஞானாஞ்சன சலாகயா
ஸக்ஷுருன் மிலிதம் யேன தஸ்மை ஸ்ரீ குருவே நம:”

“அஞ்ஞானமாகிய இருளில் நான் பிறந்திருந்தேன். ஞான தீபம் ஏற்றி எனக்கு அறிவுஒளி வழங்கிய என் குருநாதனை வணங்கிக் கொள்கின்றேன்.”

## பாரதம்....... பாடும்......!
## படும் பாடும்?

நம் பாரதம் பற்றிப் பேசுவதற்கு நமக்கு என்ன அருகதையிருக்கின்றது. இங்கே பிறந்திருக்கின்றோம். அதனால் வாழ்கின்றோம். இதைப்போலவேதான் நமது தாய் தந்தைக்கும் நாம் நல்ல பிள்ளைகளாய் இல்லை. அவர்கள் விரும்பியபடியா நாம் வாழ்கின்றோம்.? அது எப்படி முடியும் என்று காரணங்கள் ஆயிரம் சொல்வோம். அதைப் போலவேதான் நாடுபற்றிச் சிந்தித்தால் ஆட்சியாளர்களைச் சொல்லுவோம் அயோக்கியர்கள் என்று. நம்மிடம் இருக்கும் யோக்கியதை என்னவென்று தெரியுமா? அந்நிய நாடுகளில் இருக்கும் செல்வமும் தூய்மையையும் பார்த்தும் காட்டியும் உயர்வாகப் பேசிக்கொள்கின்ற மனோபாவம் நமக்குப் பொழுதுபோக்கு. அங்கே வானளாவிய கட்டிடமும் நகரத்தின் அழகையும் தூய்மையையும் காக்கப் பாடுபடுவது நமது பாரதன் தான். ஆனால் ஒரு வேலைக்காரனாக சம்பளத்திற்கு அப்படிச் செய்கின்றானே தவிர அந்நாட்டின் மீது கொண்ட பற்றின் காரணமாகவே இல்லை.

பாரதத்தின் மாண்பு அறியாதவன் இங்கே இருந்து உலகை வாழவைக்கும் செல்வங்களை உதாசீனம் செய்து உடல்பசி வளர்க்க பண்பு இல்லாதவனின் அடிமையாய் வாழ்ந்து வருகின்றவன் தன்னையே அவமதிக்கின்றான். முன்னோர்களின் வாழ்வைப் பற்றிக் கூறினால் அதெல்லாம் அந்தக்காலம்; நான் இன்று எவ்வளவு முன்னேறியிருக்கின்றேன் என்று விலைமதிப்பில்லாத வாழ்வை விலையே இல்லாமல் இலவசமாகவே அழித்துவிடுகின்றான். இத்தகைய இந்தியனால் தெய்வங்களும், தேவதைகளும் வந்து விளையாடிய மனிதப் பூங்காவாக இருந்த பாரதம் பாழடைந்தது.

நாகரிகம் இல்லாத நாட்டினர்போல் காமம்தான் அந்நியோன்ய உறவை அளக்கிறது. பணம் தான் பாசத்தைக் காட்டும் கண்ணாடி என்கின்ற பொய்த்தன்னுணர்வு.

உண்மை என்னவெனில்; ஒரு மனிதன் தனது வாழ்வின் லட்சியம் அவனது கொள்கை என்று எதைக்கொண்டு வாழ்கின்றானோ அவைகளுக்குத் தீங்கு ஏற்படாதவரைதான் வாழ்வான். அவையில்லையெனில் அவனும் இறந்து விடுகின்றான்.

வங்கி வாசலில் வண்டியை நிறுத்திச் சென்றேன். வேலைமுடிந்து வந்து பார்த்தால் காணவில்லை. வண்டியைத் திருடியவனுக்கு வண்டி தேவையில்லை. பணம் சம்பாதிக்க அவனுக்குத் தெரிந்த தொழில் என்பான். வண்டியை இழந்தவன் செத்துப்போய்விட மாட்டான் வேறுவண்டிக்கு முயற்சி செய்வான்.

தனக்கென்று லட்சியமும், கொள்கையும் இல்லாதவன் வாழ்ந்தால் என்ன? செத்தால்தான் என்ன? உடல் வாழ்வுக்கு உயிர் வந்து உபத்திரவத்திற்கு ஆளாக வேண்டுமா என்ன?

பாரதம் ஆள்வோர் இன்றித் திண்டாடு கின்றது. எவனும் பேசவும் கேட்கவும் தயாராக இல்லை. அடிமைத்தனத்தில் உயிரைப் பணயம் வைக்கத் தயாராக இருக்கின்றனர்.

உண்மையில் பாரத சமூகம் எவ்வளவு செல்வம் சம்பாதித்தாலும் அதுதான் எங்கள் குறிக்கோள் என்று இருந்ததும் இல்லை. எத்தனை இடர்களிலும் பாரதம் ஒரு வலிமையான சமூகத்தைக் கொண்டது என்பதை உலகின் மற்ற நாடுகள் நன்கு உணர்ந்திருக்கின்றன. இருந்தும் அதில் ஆணவம் கொண்டதில்லை. எந்த நாட்டையும் வெற்றிகொள்ளும் பொருட்டு வெளியே வம்புக்குச் சென்றதில்லை. தம் சொந்த எல்லைக்கு உட்பட்டுத் திருப்தி கொள்ளும் பூரண மனநிலை கொண்டவர்கள் நிறைந்தது. எனவே செல்வமும்,அதிகாரமும் நம் தேசத்தின் லட்சியம், கொள்கை இல்லை என்பது உறுதியாகின்றது. இங்கே வாழும் வாழ்க்கை உண்மையில் நிரந்தரமல்ல என்பது அறிந்த சமூகம். ஆன்மிகமே நமது உயிர்நாடி. நம்பி வாழ்வதும், 'கடவுளை' மட்டும்தான். தன் வாழ்வு தாழ்வுஅடைந்தாலும் இங்கே ஒவ்வொரு இந்தியனும் கடவுளை நம்பி வாழ்பவன். ஒருவன் குடித்தாலும் அவனுக்கும் ஒரு 'சாமி' இருப்பார். உண்ணுவதிலும், உறங்குவதிலும் உழைப்பதிலும், மணமுடிப்பதும், இறப்பதும் உண்மையில் மத ஆசாரம் இல்லாதவன் ஒருவனும் கிடையாது. திருடுவதற்குக் கூட மத ஆசாரம் கொண்டவன் இங்கேதான் இருக்கின்றான்.

ஒரு கொள்ளைக் கூட்டத்தைச் சேர்க்க விரும்பியவன் இங்கே பிறந்தவன் ஆதலால் அவனுக்குத் தெரியும் ஏதாவது ஒரு மதத்தை போதிக்க வேண்டும். புனிதப் போர்வையில் புலனின்பக் கொள்கைகளை உருவாக்கி கடவுளை கண்டுபிடித்தேன்; உன்னில் தான் இருக்கின்றான் என்று கதையளக்க வேண்டும். கடவுளே இல்லை என்று சொல்லும்வரை அவனால் ஆட்சியைப் பிடிக்க முடியவில்லை. “ஒன்றே குலம் ஒருவனே தேவன்” என்று அவனே புதிதாய் கண்டறிந்த மாதிரி உறுதியாய் பேசினான். ஏழையின் சிரிப்பில் இறைவனைக் காண்போம் என்றான். அவனைப் பின்பற்றி கொள்ளைக் கூட்டத்தில் சேர்ந்தார்கள்.

இங்கே மதம், கடவுள் இல்லாமல் எவனும் எங்கள் மக்களைப் பற்றுக்கொள்ள வைக்க முடியாது. ஆக பாரதத்தின் மாண்பு மதத்தில் இருக்கின்றது. அதற்கு எக்காலத்திலும், எந்தக் காரணங்களாலும் எப்படியாகிலும் தீங்கிழைக்க முடியாது. எனவே பாரதம் வீழ்வதில்லை ஆள்பவர் இல்லையென்றாலும் கூட வாழும்.

வரலாற்றில் 'ரோமாபுரி தேசம்' ஆளுமையை விரிவுபடுத்துவதே லட்சியம் என்றிருந்தது. அந்த லட்சியம் உடைந்ததும் தேசமும் அழிந்தது. 'கிரேக்க நாடு' 'பகுத்தறிவு' என்று பிதற்றியது. அறிவன் ஆற்றலுக்கு ஏற்ற வகையில் வீழ்ந்தது. ஒவ்வொரு நாட்டிற்கும் ஆதார சக்தியொன்று உண்டு. அது அழிந்தால் அந்த நாடும் அழியும். ஒருங்கிணைந்த சோவியத் குடியரசு அதன் கொள்கை உடைந்ததும் நாடும் உடைந்தது.

சனாதன தர்மம் கொண்ட பாரதம் என்றும் வலிமையுடன் விளங்கும். இங்கிருக்கும் எவ்வுயிருக்கும் பொறுப்பு இறைவன் தான்.

எப்படியாகிலும் என் மக்களிடம் எவனாவது புதிய கொள்கை, கொடி, சமயச்சங்கம் என்கின்ற அமைப்பை ஏற்படுத்திக் கொண்டேதானிருக்கின்றான். வறுமையையும் துயரத்தையும் பொருட்படுத்தவே மாட்டான். உடல்நலம், செல்வம், மடமை எது வேண்டுமானாலும் கடவுளிடம் தான் கேட்பான். அறிஞர்கள் சமூகத்தில் பிறவி, வாழ்வுக்குப்பின் பாவங்களுக்குப் பிராயச்சிதம் தேடியபின் புண்ணியபலன் இன்னும் “மோட்சம்” என்கிற (பிறவியி லிருந்து விடுதலை) வரம் இதையும் கடவுளிடம் தான் கேட்பான். இந்த மக்கள் நிறைந்த பாரதத்தினை அதன் புண்ணிய புதல்வர்களை ஆன்ம அறிவில்லாத எவனும் ஆளமுடியாது.

ஆன்ம அறிவில்லாத அந்நிய நாட்டில், ஒருவன் ஒரு மரத்தடியில், “நான் தியானத்தில் அமர்ந்து கொள்வேன். கிடைத்ததை உண்டு உயிர் வாழ்வேன் வேலை செய்யமாட்டேன் என்று ஒரு மனிதன் சொன்னால் சிறைக்குச் செல்லவேண்டியிருக்கும். உடல் வாழ்வுக்கும் வளத்திற்கும் அவன் பாடுபட்டுத்தான் ஆக வேண்டும். இல்லற வாழ்வின் இன்பத்தில் அவன் கலந்து கொண்டேயாக வேண்டும்.

இந்தியாவில் ஒருவன் என்னை நான் பணக்காரனாக்கிக் கொள்ள என்ன வேண்டுமானாலும் செய்வேன் என்பவன் சிறைசெல்வான். இப்பொழுது இருக்கும் நம் நாட்டின் போக்கினை நினைத்து; ஆன்ம உணர்வின் லட்சியம் நம் ஆள்வோரின் உள்ளத்தில் இல்லாமல், தேவையற்ற கல்விமுறையும் பண்பற்ற பண முதலீடுகளுமாய் அடுத்தவன் வாழ்வின் அவலத்தைக் காட்டித் தரும் அநாகரீகம் நிறைந்த ஊடக நாடகம் எல்லாம் நம் பாரதத்தின் ஆன்ம உணர்வைக் கறைபடச் செய்வதிலிருந்து காப்பாற்ற உலகம் உய்ய வழிகாட்டும் பாரதம் இறைவனின் பார்வை யிலிருந்து விலகாமல் இருக்க நம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் வேள்வி நிகழ்ந்து கொண்டே இருக்க வேண்டும்.

புத்தியே வேள்வியைச் செய்கிறது; செயல்களைச் செய்வதற்கும் அடிப்படையாக உள்ளது. எல்லா தேவர்களும் புத்தியை ஆதிபரம் பொருளாகப் போற்றுகின்றனர். புத்தி தெய்வீகமானது என்று உணர்ந்து அதற்கு ஏற்ப செயல்களில் ஈடுபட்டால் வாழும்போதே பாவங்களிலிருந்து விடுபட்டு, எல்லா ஆசை களும் நிறைவேறப்படலாம். மனம்-உடல் இவைகளின் ஆதாரம் புத்தி.

தைத்ரீய உபநிஷதம்-5.2.

பூமியைப் போல் பெற்றதை பெருக்கிக் கொடுப்பதே வேள்வி. நமது வாழ்விற்கு என்னவெல்லாம் இயற்கையிடமிருந்து பெற்றோமோ அவையெல்லாம் மீண்டும் இயற்கையை வளப்படுத்தத் திருப்பித் தருவதே வாழ்க்கை. அதைத்தான் வேள்வி என்று சொல்கின்றார்கள். யார் மூலமாகத் திருப்பிச் செலுத்த முடியும்? புத்தியால்தான் முடியும். புத்தியால் மனதில் இறைவன் நாமம் பதிய வேண்டும். வேள்வி விளங்கும்.

சொல்வீர்:

ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண
கிருஷ்ண கிருஷ்ண ஹரே ஹரே
ஹரே ராம ஹரே ராம
ராம ராம ஹரே ஹரே – வெல்வீர்.



# இந்த இதழில்.....




வரைகலை : Dr. P. கோகிலா M.D(s)

அச்சுக்கலை : B. விவேகானந்தம்,
ஜே.வி. ஆப்செட் பிரிண்டர்ஸ்,
795, மலையடிப்பட்டி,
இராஜபாளையம்.





வாசகர் கடிதம் அனுப்ப வேண்டிய முகவரி:

மா. மதிவாணன்,
தபால் பெட்டி எண்: 25,
ஸ்ரீவில்லிபுத்தூர்,
விருதுநகர் மாவட்டம்,
தமிழ்நாடு, இந்தியா.



வெளியீடு : SMART,
Sri Mahavana Rural Trust,
Rajapalayam.

ஆசிரியர் : மஹாவனதாஸ்

தொடர்புக்கு : 94860 13732.



# சிந்தாமணி

*தன்னகத்தே கொண்ட தன்மையால் பரிமேலழகும் பொன்மயமாகும் தகைமையது.*

யத்ஸங்கல்பம் நிஜவீர்யவைபவம்
தீர்தம் மஹு: ஸம்ஸ்ப்ருஸதாம் ஹி மாநஸம்
ஹரத்யஜேரந்த: ஸ்ருதிபிர்கதோங்கஜம்
கோ வை ந ஸேவேத முகுந்தவிக்ரமம்

நீரைப் போன்று தூய்மையாக்கும் பகவானது திருவிளையாடல்கள் பற்றிய கதைகள், அந்த இறையடியார்களின் இணக்கத்தால் கேட்கக் கிடைக்கின்றன. அந்தக் கதைகள், பகவானது நிகரற்ற பெருமைகளையும் செயல்களையும் விளக்குகின்றன. அந்தக் கதைகளைத் திரும்பத் திரும்பக் கேட்போரின் காதுகள் வழியாக, இறைவன் இதயக்கமலத்தை அடைந்து அவர்களது உடலைப் பற்றியிருக்கும் வியாதிகளையும், மனம் பற்றிய ஆதிகளையும், மற்றுமுள்ள மாசுகளையும் துடைக்கிறார். அத்தகைய இறையடியார்களின் இணக்கத்தை நல்லறம் மிக்கவர் எவரும் மறுப்பதில்லை.

– ஸ்ரீமத் பாகவதம் 5:18.10.

✶ ஸ்ரீஸ்ரீராதா ஸ்யாம ஸுந்தராய நம:
ஸ்ரீஸ்ரீக்ருஷ்ண சைதன்ய சந்த்ராய நம:
ஸ்ரீக்ருஷ்ண!நிமாய்கௌர ப்ரமோதயபூரி போதயனா நம:
கிரிதாரி! ஜகதீஸ! தாமோதர! பாஹிமாம்.

★ செல்வங்களின் செல்வமே! பிரியமான ராதையின் பிரியமான ஸ்யாமளவண்ணமே! (சிருஷ்டி) படைப்புகளுக்கெல்லாம் அழகை வழங்கும் அழகனே! உன்னை வணங்குகின்றேன். என் விருப்பம்போல் வருணித்து வருணித்து நினைப்பதை எழுதி எல்லோரும் வாசிக்க; எண்ணங்களெல்லாம் உன்நினைவில் உழலவேண்டும் என்கின்ற ஆசையைத்தான் வணங்குகின்றேன் என்றேன். மீண்டும் வணங்குகின்றேன்.

என்ன தைரியத்தில் வாழ்கின்றேன் என்று தெரியவில்லை. என்னோடு வாழ வந்தவர்களுக்கெல்லாம் என்னிடம் எந்த நம்பிக்கையும் இல்லை. தேவையற்ற சுமைதான் நான்.




எதையும் உணராமல் இன்னும் ஸ்ரீ கிருஷ்ணன் கதைகளை எழுதவும், பேசவும், கேட்கவுமாக வாழ்ந்து கொண்டிருக்கின்றேன். இந்த மயக்கம் எதையும் மறக்கச் செய்யாது. மதுபோதையில் எல்லாம் மறந்துவிடும். ஸ்ரீ கிருஷ்ண கானாம்ருதத்தில் ஞானமும் இல்லாத சமயத்தில் எப்படியோ விரஜவல்லபன் சைதன்யசந்திரன் உள்ளே புகுந்து விட்டான். உயிரின் ஒளியாய் இருப்பவனால் எல்லாவற்றையும் பார்க்க முடியும். ஒளியில்படும் பொருள் ஏதாகிலும்; நான்தான் இதோ இங்கே இன்னாராக இருக்கின்றேன்'' என்று சொல்லுமா? சொல்கின்றனவே! ப்ரமோத்புரி கோஸ்வாமி தாமரையிதழ் சொன்ன 'மஹாவன்' என்றழைத்த மணியோசை குருடன் காதில்விழுந்துவிட்டனவே! எப்படித்தான் நான் நன்றியுள்ளவனாவேன்!

கொஞ்சமேனும் பணிவாய் நடக்கப் பழகலாம் என்றால்! ஹே கிருஷ்ண போதாயன ஸ்வாமி அவர்களே! தங்களாலும் என்னைக் கைவிட முடியவில்லையே! எப்படியாவது வாழச் சொல்லி பக்த வத்ஸலனின் பாதங்களின் சுவடு நிழல்படும் இடத்தில் நிற்கவைக்கின்றீர்களே! எப்படி உங்களை என்னால் போற்றிப் புகழாதிருக்க இயலும். அன்பே! என் தெய்வச் சகோதர கிரிதாரியே! உங்கள் பார்வையில் பட்டதைத் தவிர நான் வேறு என்ன செய்தேன்! எல்லோரும் என்னைக் காப்பாற்றுங்களேன்.

விரஜத்தில் விருப்பங்கள்; விரகம்தான் வாங்கும் வரம். வேண்டத் தெரியாத அறிவிலியெனக்கு அதை வாங்கித்தந்த ஜகதீஸ்பிரபு என்னால் உங்களுக்கு அபராதமேதும் வராமல் போகட்டும். 'ஜெகந்நாதர்' நம்மைக் காக்க வேண்டும். அம்மாவின் கட்டுக்குள் இருக்கும் கண்ணன் இடுப்புக்கயிறு உங்கள் திருநாம மகிமைதான் உங்கள் உள்ளமும். பிரியமான தாமோதர மஹராஜ் நீங்களும் என்னைக் காப்பாற்ற வேண்டும்."

இவ்வாறாக எனது குருமார்கள் அனைவருக்கும் வணக்கங்களை நினைவு கூர்ந்துவிட்டு மீண்டும் ஸ்ரீ கிருஷ்ண கதைகளைச் சொல்ல ஆரம்பிக்கின்றேன். இன்னும் எத்தனையோ மகான்களுக்கு முன்பாக நான் சொல்லும் கதையில் உங்களுக்கு ஏதாவது நிம்மதி வந்தால் அது உங்கள் மனத்தூய்மை தான் காரணம். நானல்ல.

அதி உன்னதமான தெய்வீகத் தம்பதிகள் ஸ்ரீராதா ஸ்யாம சுந்தர கடவுளின் கதைகளை; யாரிடம் சொல்லுவேன்? எனக்கு மட்டும் அந்தக் கதைகளின் உள்ளார்ந்த உட்பொருளும் அதனால் விளையும் ஆனந்த நிலையையும் அடையும் தகுதி இருக்கின்றதா என்று நான் சந்தேகித்தால்....?

தகுதியற்ற துரதிர்ஷ்டசாலியாய் நான் இருக்கின்றதை உணர்ந்ததும் ஏக்கமான ஒரு பெருமூச்சுடன் கதை சொல்லும் விருப்பம் செயலாகாமல் நின்றே விட்டது. எனது குரு மஹராஜ் சித்திரத்தின் முன்னால் நான் நிற்கும் போதெல்லாம் 'நான்' இருந்து கொண்டேதான் என்னால் இறையருளை அவர் வழங்கியிருந்தும் கூட அதைப் பெற்றுக் கொள்ள அறிவில்லை. **'நான்'** இப்பொழுது இருக்கின்றதா இல்லையா யார் கண்டது! குருவே சரணம்!

'ஸ்ரீ' இச் சொல்லின் லட்சணங்களை அளக்க இந்தப் பிரபஞ்சம் போதாது. 'ஸ்ரீ'இன்–மன. இலக்ஷ் + மன = இலக்ஷ்மனன் அநேக பேரண்டங்களில் மொத்த லட்சணங்களும் சேர்ந்த குண அவதார புருஷனாக 'லட்சுமனன்' என்ற இளைய பெருமாள். அவரது ஆற்றல் மிக்க தெய்வத்தொண்டு லீலைகளை நினைவு கூர்கின்ற நொடியில் ஜீவன் பக்திச் சேவையைப் பெறுகின்றான். இங்ஙனம் சேவகனாக முதலில் முயற்சி செய்வோம்.

ஸ்ரீ ராம லக்ஷ்மன ஜானகி ஸ்மரண சேவக
ஹனுமானு மம பிரிய தியான ஜெயமே நம:

மீதமில்லாத முழுமையான செல்வ வளம் எல்லாவற்றின் வடிவமாகிய ஸ்ரீ என்கிற ஆதிலட்சுமியின் பதியாகிய ஆதி பரம்பொருளான ராம என்கிற புருஷோத்தமனின் லட்சணங்கள் அனைத்திற்கும் ஒரே மன வடிவமான லட்சுமனனின்; பண்பில் நிறைந்த அன்பும், வீரமும், அறிவும், காலமும், வெற்றியும் வழங்கும் அமுதக்கடல் என்கின்ற ஜானகி எனும் பேரின்ப வடிவத்தின் நினைவில்; எல்லாவிதமான மக்களுக்கும் பக்தி சேவகனாகத் தன்னை வைத்துக் கொண்ட அனுமனுக்கும்; மனம் தியானிக்கும் பிரியமான எல்லா வெற்றிக்கும் நமஸ்காரம்.



திரிலோக சஞ்சாரி
**நாரதர்**



## தன்வயமானதெல்லாம் தன்மயமான கதை:




தானேதான் தன்வயத்தால் படைத்தான்,
நானேதானென்று ஏதுமறியாததை விதைத்தான்.
புலனைந்தும் புத்தி மூன்றும் எட்டானதெல்லாம்
தட்டுத்தடுமாறாதிருக்க ரஸத்திற்கொன்றாய்
நிலவெனும் கலைவளர்த்தான்
புவிதேடிப் பொருள் வைத்தான்
புலனுக்கும் உலைவைத்தான்
பேராசைப் பேழைக்குள் புத்தியை
வைத்துப் பூட்டினான்.
போகமெனும் பாதையில் தேடித் திரும்பி
தன்வயமானவனை தக்க வைத்தான்
தானே அவன்மயமாக ஆசைவைத்தான்
தன்வயமானவனைத் தான்
தன்மயமாக்கிக் கொள்ளத் தானே
(ஸ்ரீகிருஷ்ண சைதன்யனாக வந்தான்.)
சைதன்ய சந்திரனாய் நாமாமிர்தம்
பொழிந்தான்.

எங்கு வேண்டுமானாலும் இருந்து கொள் என்று என்னை நீ விட்டுவிட்டால் நான் எங்கே தானிருப்பேன்?
அன்னையாய் நீயிருக்க நான் மறுப்பேனா?
அத்தனாய் நீயிருக்கத்தான் நான் தடுப்பேனா?
நானே தான்; பொழுதுக்கொன்றாய் நாளுக் கொன்றாய்
பொல்லாவினைபேசித்திரியும் புலம்பல் மானிடனின்
புலனுக்குப் பொருந்தும் துணையாய் வாழ்கின்ற
சுமைகளையெல்லாம் களைய நீயே கருணைகாட்டி
எங்குவேண்டுமானாலும் இருந்து கொள்ள
எனக்கருளினால் நான் எங்கேதானிருப்பேன்?

சுமைகளை இழந்த சோகத்தை உன்னிடமா சொல்லுவேன்!

இந்த பூ மண்டலத்தில் நாம் உடலெடுத்து வாழ்வதற்காக அலைந்து கொண்டும், நமக்குத் தேவைப்படும் என்கின்ற நினைப்பில் எதையெல்லாமோ சேகரித்துக் கொண்டும், சேர்த்தவைகளை வைத்துக் கொள்ள ஒரு வளையை (வீட்டை) வசதியாய் காத்துக் கொண்டும் உயிர்விடும் வரை அதுதான் தன் வாழ்வென்று மடிந்து மண்ணுக்குள் போவதே தெரியாமல் போய்விடுகின்றோம்.

உண்மையில் இதே பூமி மனிதர்களுக்கு மட்டுமல்ல எல்லா வகையான உயிர்களுக்கும் இனிமை நிறைந்த வாழ்வை வழங்கிக் கொண்டிருக்கும் குறிப்பிட்ட சில நிலப்பகுதிகளை பத்திரமாக வைத்துக் கொண்டிருக்கின்றது. அப்படிப் பட்ட இடங்களுக்கு நமது பார்வைக் குறைவினால் போகத் தெரியாமல் இருக்கலாம். அதன் கதைகளைக் கேட்கத் தெரியாமல் இருக்கக் கூடாது. அப்படிப்பட்ட இடங்களுக்கு உயிரோட்டமுள்ள கதைகள் நிறையவே இருக்கின்றது. பாரதம் இந்த மாதிரியான அற்புத கதைகளும் உணர்வுகளும் நிறைந்த நிலப்பகுதிகளை நீண்ட காலமாகவே களங்கமற்ற நம்பிக்கையுடன் தக்கவைத்துக் கொண்டிருக்கின்றது. இப்பொழுது நாம் பார்க்கப் போகும் இடம் 'விரஜ பூமி' எனும் 'பிருந்தாவனம்'. இது கோவர்த்தன கிரியை, தன்னகத்தே கொண்ட வனம். காடாக அறியப்பட்டாலும் வாழும் உயிர்களுக்கு வேண்டியதை வழங்கிக் காப்பாற்றும் கருணையுள்ள நிலம். இதன் உரிமையாளர்கள் யாரும் தன்னுரிமை பாராட்ட மாட்டார்கள். திகட்டாத இன்பத்திற்கு திறவுகோலாக இருப்பார்கள். அவர்களின் அன்பில் எந்த விதத்திலும் சந்தேகம் வரவே வராது.அந்த மகிழ்ச்சியும் தானாகவே விளைகின்றன. அன்புக்குரியவனாகி விட்டேன் என்பதே தெரியாமல் பெறும் இன்பத்தினால் அன்பைச் சந்தேகிக்க வழியேது? கோலோகத்தின் சாரம்சம் பூலோகத்தில் கோகுலம். பசுக்களும் பக்தர்களும் வாழுமிடம்.



திரிலோக சஞ்சாரி
**நாரதர்**

கோகுலம் வழக்கம்போல் ரம்யமான சூழலில் இருந்தாலும் இந்த காலைப் பொழுது வினோதமாக விடிகின்றது. இருளும் குளிரும் கலந்த பகலவன் பார்க்கும்முன் உள்ள வானம் மெல்ல நட்சத்திரங்களை மங்கச் செய்து கொண்டிருக்கின்றது.

ஸ்ரீபலராம கிருஷ்ணரின் கௌமார வயது கழிந்து கொண்டிருக்கின்றதும் பௌகண்ட வயதின் பொலிவை நெருங்கிக் கொண்டிருப்பதுமான பருவம். இரு சிறுவர்களும் அதை ஆவலுடன் இயற்கைக்கு ஏற்றபடி விரும்பினர். எனவே அடைந்தனர்.

இருபாலகர்களின் வனப்பையும், செயல்படும் லீலைகளையும் காணும் முனிவர்கள் கூட மனம் மயங்கினர். விளையாட்டாகவே பலவித வித்யைகளையும், இசைப்பயிற்சிகளையும் கற்றுக் கொண்டனர். எல்லா உயிர்களையும் கொள்ளை கொள்ளும் வசீகரத்துடன் இனிய கீதங்களை தனது புல்லாங்குழலின் வழியாகப் பொழியும் கிருஷ்ண சந்திரனைக் கணநேரமும் காணாதிருக்க இயலாமல் கோகுலத்தில் அனைவரும் தவித்தனர்.

இன்றைய காலை என்னவோ! அதி சீக்கிரமாக எல்லோருக்கும் முன்பாக எழுந்தது ஸ்ரீகிருஷ்ணன்தான். உறங்கி எழுந்தமாதிரி எப்பொழுதும் இருக்கமாட்டான் கிருஷ்ணன். புத்தம்புதிதாய் பூத்த தாமரை மலர் போல் களிப்புடன் இருப்பான். எழுந்ததும் தனது வேணுகானத்தை ஆரம்பித்தான். கோகுலம் இளங்காற்றில் மணக்கும் இசையுடன் எழத் தொடங்கியது. முதலில் ஸ்ரீகிருஷ்ணனின் நண்பர்கள் ஒவ்வொருவராக வந்து சேர்கின்றனர். ஏனோ இன்னமும் அண்ணா பலராமன் வரவில்லை.

அகிலங்களின் காவலன். பலராமனின் மனதில்; தம்பி ஸ்ரீகிருஷ்ணன் இன்று தனது லீலைகளைச் சுதந்திரமாகச் செய்ய வேண்டும் என்று உதயமானது. அதுவும் ஸ்ரீகிருஷ்ணனுடைய உள்ளத்தின்படியேதான் நிகழ்கின்றது. தனது புல்லாங்குழலின் இசையால் கோபாலர்களை எழுப்பிய கண்ணன் ஒரு மேடையில் உட்கார்ந்திருந்தான். பலராமனை எதிர்பார்த்திருந்தான். ஒரு சேவகன் வந்தான். அவன், ஸ்ரீகிருஷ்ணனை வணங்கினான். 'அண்ணா பலராமனின் செய்தி நான் சொல்கின்றேன்,

"ஓ கிருஷ்ணா! உன்னுடன் விளையாட நான் விருப்பத்துடன்தான் இருக்கின்றேன். இன்று தெய்வ வசமாக வீட்டிலேயே இருக்கும் படியாயிற்று. புரு வம்சத்தில் தோன்றிய எனது மாமன் தற்செயலாக ஆபூர்வமாக தீர்மானிக்க வேண்டிய ஒரு காரியத்திற்காக என்னைக் காண வந்திருக்கின்றார். நீ இன்று அதிகாலையில் எல்லோருக்கும் முன்னதாகவே எழுந்திருக்கின்றாய். ஏதோ ஒரு காரியத்தை விரும்பிச் செய்யும் உற்சாகத்திலிருக்கின்றாய் என்று உணர்கின்றேன். சுதந்திரமாகச் செய்யலாம். ஒரு செயலுக்கு வரும் தடையானது அந்தச் செயல் தன்னிச்சையாக நிகழ வேண்டுமென்பதற்காகத்தான். ஆனாலும் என்ன! நான் கலந்து கொள்ள முடியவில்லை என்பதைத் தடையாகக் கொள்ள வேண்டாம்.

ஸ்ரீகிருஷ்ணனுக்கு எல்லாம் விளங்கிற்று. இன்றைய நிகழ்வுகளை அண்ணா பலராமன் தீர்மானித்திருக்கின்றான்.

"நல்லது. நீங்கள் எல்லோரும் உறியில் உங்கள் உணவுப் பண்டங்களை எடுத்துக் கொள்ளுங்கள் நாம் நமது கன்றுகளுடன் கானகம் செல்வோம்."

உற்சாகம் கரைபுரண்டு ஓடும் காட்டாற்று வெள்ளமென கோபாலகர்கள் கூச்சலும் கும்மாளத்துடனும் புறப்பட்டனர்.

பூமியெனும் பொன்மகள் பூரிக்க புழுதிகளைக் கிளப்பிக்கொண்டு பசுக்களின் குளம்படிகள் ஓசை மந்திரங்கள் போல் மாதவம் புரியும் முனிவர்களையும் மனம் மயங்கச் செய்ததுடன் தேவர்களையும் மண்ணுலகிற்கு வரச் செய்தது. வந்தவர்கள் வணங்கினார்கள். வாழ்த்தினார்கள். அசுரர்களுக்கும் இருப்புக் கொள்ளவில்லை.

தனது எமன் தன்னை நெருங்கும் முன் அவனை தனக்கே பலியாக்க வேறு என்ன செய்யலாம் என்று யோசித்த கம்சனுக்கு

பகாசுரன் சகோதரனான அகாசுரன்தான் நினைவுக்குள் வந்தான். பகாசுரனைக் கொன்றவனை பழி தீர்க்காமல் இருக்கும் அவனது பகையை வளர்த்து கோகுலம் அனுப்புவோம் என்று நினைத்ததும் திமிரும், தற்பெருமையும் கம்சனை தலை நிமிர்த்தச் செய்தது.

இக்காலத்தில் இந்த மாதிரித்தான் தலைவர்கள் திரிகின்றனர். தர்மம் பேசுகின்றனர். அவர்களைப் போல் வாழ மக்கள் விரும்பி அவர்கள் அழிவைத் தாங்கள் ஏற்றுக் கொண்டு வாழ்த்துச் சொல்லி முழங்குகின்றனர். அவமதிப்பை அறிவீனத்தால் வாங்கிக் கொண்டாடுகின்றனர். என்னதான் பூமகளின் பொறுமையைச் சாடுகின்ற சண்டாளர்கள் திரிந்தாலும் பரிதாபத்திற்குரிய அவர்கள் வாழ்வும் அற்பகாலம்தான் என்கின்றதால் யாரும் பொருட்படுத்தத் தேவையில்லை. புனிதத் தலங்களுக்குச் செல்ல முடியவில்லை என்றாலும் இருக்குமிடங்களை புனிதமாக்கும் ஆழ்வார்களும் நாயன்மார்களும் வாழ்ந்த பூமி. அன்னை பாரதம் மனம் மகிழ, இன்னிசையாய் வேணுகானம் பிருந்தாவனமெங்கும் சுவாசமாய் சுழல்கின்றது.

சுதந்திரமாய் செயல்படு என்று பலராமன் சொன்னது ஸ்ரீ கிருஷ்ணன் விரும்பியது. ஊரிலிருந்து வெகு தொலைவு வந்துவிட்டனர். பசுக்களும் வளர்ந்த கன்றுகளுமாக காட்டின் அடர்ந்த பகுதி கடந்து வளர்ந்த புல்வெளிக்கு வந்தனர். பசுக்களுக்கு மேய்ச்சல் காட்டினர்.
ஸ்ரீகிருஷ்ணனை மகிழச் செய்வதொன்றே அவர்களின் விளையாட்டு. வாழ்க்கையே அவர்களுக்கு விளையாட்டுத்தான்.

வனத்திற்குள் நுழைந்ததும் அவர்கள் ஓடி ஓடி மலர்களையும் குந்துமணிகளையும் சேகரித்தனர். அவைகளைக் கொண்டு தங்களையும் ஸ்ரீ கிருஷ்ணனையும் அலங் கரித்துக் கொண்டனர். பொன்னாபரணங்கள், மணிகள், முத்துமாலைகள் இப்படி விலை உயர்ந்த செல்வங்களை அணிந்திருந்தாலும்; இயற்கையான குந்துமணிகளின் அழகுக்கு அவைகள் ஈடாகாது என்கின்ற உள்ளம்.
ஸ்ரீகிருஷ்ணனுடனான உறவு; பசுக்களுடன் கொண்ட பரிவு இவையெல்லாம் ஆயர்கள் வாழ்வின் அணிகலன்கள். விளையாட்டை ஆரம்பிக்க உணவுக்கலயங்களை உறியோடு மரக்கிளைகளில் மாட்டிவிட்டனர். ஸ்ரீகிருஷ்ண னின் புருவ அசைவின் அலைகள் அவனது புல்லாங்குழல் இசையில் கலந்து புலன்களை யெல்லாம் புளகாங்கிதமாக்கின.

ஒருவரோடொருவர் கட்டிப்பிடித்தும் துரத்தியடித்தும், ஓடியும் விளையாடினர். அடுத்தவர் பொருள்களை அபகரித்துக் கொண்டனர். என்னுடையது என்று அவன் வரும்பொழுது தொலைவில் தூக்கியெறிந்தனர். அவனுடைமையென்று வேறு ஒருவன் எடுத்துக் கொண்டு ஓடுவான், அவனைத் துரத்திப் பிடித்து உற்ற பொருளை உடையவனிடம் கொண்டு வந்து தருவான் ஒருவன். குயில்களைக் கண்டால் கூவினர். மயில்போல் ஒருவன் ஆடினான். தாழப் பறந்து செல்லும் பறவை நிழலைத் தொடர்ந்து ஒருவன் ஓடினான்.

வனத்தின் அழகும், கோபாலர்களின் விளையாட்டும் தேவர்களும் கண்டு களித்தனர். ஸ்ரீ கிருஷ்ணனின் புன்னகையில் மேலும் உற்சாகமாகிய பாலகர்கள் விரைவாகவும் மெதுவாகவும் வேலைகளைச் செய்யும் லீலைகளில் தங்களுக்குகந்த விஷயங்களையே கற்றறிந்தனர். நல்லியல்பினால் நலம் தரும் செயல்களின் சிந்தனைகளை மட்டுமே அறிவுக்கு உருவேற்றினர். அவர்களுக்கு ஸ்ரீகிருஷ்ண னுடன் சேர்ந்ததால் எற்பட்ட சுகபோகம் போலவே ஸ்ரீகிருஷ்ணனுடைய பிரிவும் அவர்களுக்கு சுகமாகவே இருந்தது.

இத்தம் ஸதாம் ப்ரஹ்ம ஸுகாநு பூத்யா
தாஸ்யம் கதா நாம் பர தைவதேந
மாயாஸ்ரி தாநாம் நரதார கேண
ஸாகம் விஜஹ்ரு: க்ருதபுண்யபுஞ்ஜா:

ஸ்ரீகிருஷ்ணன், நல்லியல்பினருக்கு பிரும்ம சுகானுபவம்! தாஸ்ய பக்தியுள்ளவர் களுக்கு பெரும் தெய்வம்! மாயையால் உண்மையறியாது அண்டியவர்களுக்கு மனிதச்சிறுவன்! இவ்வாறான ஸ்ரீகிருஷ்ண னுடன் பெரும் புண்ணியங்கள் செய்த கோபாலச் சிறுவர்கள் விளையாடி மகிழ்ந்தனர்.

– ஸ்ரீமத் பாகவதம் – 10:12:11.

ஒருவரது உள்ளத்தில் ‘பொறாமை’ என்கின்ற தீ மட்டும் இல்லையென்றால் வேறு கேடான ஆசைகள் எத்தனை இருந்தாலும் அவைகளை அவனே கைவிட்டுவிடும் நிலைக்கு காலம் அவனை வழி நடத்துகின்றது. வாழ்வின் ஒவ்வொரு தருணங்களிலும் குற்றமற்ற செயல்களிலீடுபடும் வாய்ப்பு மட்டுமே கிடைக்கின்றது. அதுவே செல்வம் மட்டும் பெறுகின்ற புண்ணியங்களுக்கு மேலான தெய்வானுகூலமான புண்ணியங்களுக்கு புண்ணியங்களாக மாறுகின்றது.

மற்றை நம்காமங்கள் மாற்று....திருப்பாவை.29.

ஸ்ரீ பகவாநுவாச:
ப்ரஜஹாதி யதா காமாந்ஸர்வாந்பார்த மனோகதாந்
ஆத்மந்யேவாத்மநா துஷ்ட: ஸ்திதப்ரஜ்ஞஸ்ததோ ச்யதே
கீதை-2:55.

பகவான் கூறினார்:

அர்ஜுனா! எப்பொழுது இந்த மனிதன் மனதிலுள்ள எல்லா ஆசைகளையும் அறவே துறக்கின்றானோ, மேலும் ஆத்மாவினால் ஆத்மாவிடமே ஆனந்தமாக இருக்கின்றானோ, அப்பொழுது அவன் ‘ஸ்திதப்ரக்ஞன்’ என்று கூறப்படுகின்றான்.

தன்னுணர்வில் நிலை பெற்றவன் நிறைவானவன்.

‘ஸர்வ காமாந்’ ‘மநோகதாந்’ எல்லா வித ஆசைகளையும், ‘மனதிலுள்ள’

புலன்களால் ஆசைகள் இன்பமோ துன்பமோ நுகர்ந்து அழிகின்றன. ஆனால் அவைகள் இருக்குமிடம் மனம். ஆகையால் மனதிலுள்ள ஆசைகளை அகற்றியவன்தான் ஆன்ம உணர்வை அறிகின்றான். முன் அனுபவத்தினால் உண்டான வாசனை, புதியதில் ஆவல், வெளிவிசயங்களில் காணும் விருப்பங்கள் மற்றும் பேராசை இவ்வாறான பேதங்கள் இருக்கின்றதால் ‘காமங்கள்’ ‘ஸர்வகாமாந்’ எல்லாவிதமான ஆசைகளையும் விட்டொழக்கின்றவன் ‘ஆத்மந்யேவாத்மநா’ மனம் முழுவதும் ஸ்ரீகிருஷ்ணனே இருக்கின்றதால் ஆசைகளோ அவைகளின் முதிர்ந்த உணர்வுகளோ அறிவினில் இடம் பிடிக்க மனதில் இடமில்லை. இத்தகைய கோபாலர்கள் பெற்ற புண்ணியம் வேறு எவரும் பெறவில்லை.

ஸ்ரீகிருஷ்ணன் மாயமாய் விலகி கண்களுக்கு எட்டிய தூரத்தில் முன்னால் சென்றுவிட்டானென்றால்; நான்தான் முதலில் பிடிப்பேன், இதோ நான் முன்னால் போய் பிடிக்கின்றேன்பார் என்று கூறி ஓடிவந்து ஸ்ரீகிருஷ்ணனைக் கட்டிக் கொள்வார்கள். இன்னும் இவர்களின் விளையாட்டில் அஹங்காரம் போல் விளையாட்டுக்கள் அதி உன்னதமான லீலைகள். ஒருவன் ஸ்ரீகிருஷ்ணனைப் போலவே அவனது பீதாம்பரத்தை வாங்கிப் போட்டுக் கொண்டு (அஹம்) நான்தான் ஸ்ரீகிருஷ்ணன் என்று விரல்களால் புல்லாங் குழல் வாசிப்பதைப் போல் அபிநயப்பான்.

ஸ்ரீகிருஷ்ணனின் முகத்தில் அரும்பும் புன்னகையின் அளவிற்கேற்றபடி ஒவ்வொரு விதமாக விளையாடி ஆனந்தித்தனர். வனத்தில் ஓங்கிக் குரலெழுப்புவர். எதிரொலியை தன் எதிரியாகப் பாவித்து சண்டை போடும் விதத்தில் திட்டுக்களை, சாபங்களை கத்துவார்கள். எதிரொலி கேட்டு மேலும் கோபம் கொண்ட மாதிரி நடிப்பார்கள். ஸ்ரீகிருஷ்ணன் பகாசுரனைக் கொன்றதைப்போல் தாங்களும் வீரர்கள் தான். எங்கிருந்தாலும் வாருங்கள் ஒரு கை பார்த்து விடுகின்றேன் என்று வீரவசனம் பேசுவார்கள்.

ஸ்ரீகிருஷ்ணன் பாராட்டினால் பெருமிதமும் வெட்கமும் அடைந்து மகிழ்வார்கள். அவர்களின் விளையாட்டுக்களில் மகிழ்கின்றது கண்டு ஸ்ரீகிருஷ்ணன் ஆனந்தித்தான்.

ஸ்ரீ சுகதேவகோஸ்வாமி கூறுகின்றார்:

“விரஜபாலகர்கள் அடைந்த கதி-பதவி-மாயை மயமான மக்களின் மதியை மயக்குபவை. ஆத்ம ஞானம் கலந்த பக்தியுடையவர்களுக்கும் கோகுலவாசிகளின் கதி மிகவும் அரிதான ஒன்றாகும்.”

ஸ்ரீகிருஷ்ணன் இன்றைய லீலையை விஸ்தரிக்க விரும்பினான். கம்சனின் மனதில் பெரும் சக்தியுடன் கிலிபிடித்துக் கொண்டது. ‘அகாசுரனைப்’ பார்த்து கம்சன், ‘உனது உறக்கத்திலிருந்து நீ எழுந்து அதிர்ச்சி யடையாமல் என் பேச்சைக்கேள். உனது சகோதரி பூதனையும், சகோதரன் பகாசுரனும் என்னைக் காக்க தங்கள் உயிரை விட்டனர். என்னைக் கொல்பவன் உன்னை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றான். நீ மலைப்பாம்பின் பாவனையில் விழிப்பில்லாமல்

உறக்கத்திலேயே இருக்கின்றாய். அதனால் விளையும் தீங்கினை உணராமலிருக்கின்றாய். அதனால் தான் உன்னை நான் எழுப்பினேன்.

கிரஹ மண்டலங்களை மறைக்கும் மேகங்களைப் போல் மாய வலைகளைப் பரப்பும் எல்லாவித வஞ்சகக் கலைகளில் தேர்ந்தவனான அகாசுரனை கம்சன் தன்பயத்தால் உசுப்பினான். அவனை ஆத்திரமூட்டுவதற்கென்றே, ''உன் சகோதரனின் பரம வைரியை நீ விழுங்கிவிடவேண்டும். அவனுடன் அவனது எல்லாவற்றையும் அழித்துவிடு. இது உன் கடமை.'' என்று கட்டளையிட்டான்.

ஸ்ரீகிருஷ்ணனும் அவனது நண்பர்களும் விளையாடிக் கொண்டிருக்கும் வனத்திற்குள் அகாசுரன் வந்தான். மலைச்சரிவில் மிகப் பெரிய மலைக்குகை போலவே தனது வாயை திறந்து கொண்டு மலைப்பாம்பு வடிவில் கிடந்தான். ஆடிப்பாடி விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்கள் இந்த சர்ப்பத்தைக் கண்டனர். பரிகசித்தனர். எப்படியெல்லாம் விளையாடி கண்ணனின் லீலையில் மனம் மயங்கினரோ அவ்வாறே மிகப் பெரிய சர்ப்பத்தைக் கண்ட சிறுவர்களும் மிகவும் அலட்சியமாக அதே விளையாட்டுக் குணத்துடன், இந்த பாம்பு அசுரனாயிருந்தால் பகாசுரனைப் போல் நம் ஸ்ரீகிருஷ்ணனால் கொல்லப்படட்டும் என்று கூறிக் கொண்டே அதே கூச்சல்களுடன் திறந்திருந்த அதன் வாய்க்குள் தங்கள் கன்றுகள் பின்தொடர உள்ளே நுழைந்தனர். ஸ்ரீகிருஷ்ணன் அவர்களைத் தடுக்கும் முன் அவர்கள் ஸ்ரீ கிருஷ்ணனையும் வரச் சொல்லிக் கைகளைத் தட்டிக் கொண்டே அகாசுரனின் திறந்த வாய்க்குள் நுழைந்தே விட்டனர்.

ஸ்ரீகிருஷ்ணன் தனது லீலையின் பாவனையில் நிலைத்து வியப்பும் அனுதாபமும் கொண்டான். தனது கோபாலகர்களின் தயவில் ஸ்ரீகிருஷ்ணனும் அகாசுரன் வாயினுள் புகுந்து கொண்டான். அவனது தொண்டைக்குள் வளரலானான். ஒருசில நொடிகளில் அகாசுரனின் சுவாசம் அடைக்கப்பட்டுத் திணறினான். உயிர்பிரிந்தது. அவனறிவும் மறைந்தது. தலை வெடித்தது. அகாசுரனின் ஆத்மஜோதி வெளியேறிக் காத்திருந்தது. இராகுவின் பிடியிலிருந்து சந்திரன் வெளியே வருவதுபோல் ஸ்ரீகிருஷ்ணசந்திரனும் அகாசுரனின் உடலைப் பிளந்து கொண்டு வெளியில் வந்தான். அவனைத் தொடர்ந்து அவனது நண்பர்களும் வெளியில் வந்தனர். ஸ்ரீகிருஷ்ணனின் வரவுக்குக் காத்திருந்த அகாசுரனின் ஆன்மஒளியானது சூரியனில் மறையும் சிறுசுடர் போல் ஸ்ரீகிருஷ்ணனின் அங்கஜோதியில் மறைந்ததை தேவர்களும், கோபாலகர்களும் கண்டனர். மலர்களைப் பொழிந்தனர். விரஜ ராஜகுமாரனுக்கு பூசை செய்து ஆடிப்பாடிக் கொண்டாடினர்.

ஸ்ரீகிருஷ்ணன் தன் நண்பர்களை அழைத்துக் கொண்டு தடாகத்திற்கு வந்தான். அதன் அழகை தன் நண்பர்களுக்குக் காட்டி தூய நீரும் அதில் மலர்ந்திருக்கின்ற தாமரை மலர்களின் வனப்பையும் பாராட்டி உற்சாகம் ஊட்டினான். அனைவரும் குளித்துக் கும்மாள மிட்டனர். இப்பொழுதும் விரஜ நண்பர்கள், அகாசுரனை ஸ்ரீகிருஷ்ணனின் சொற்கள் போலவே, "அடே அகாசுரா உன் உறவினர்கள் தங்கள் செயல்களால் அழிந்தனர் என்று நீ அறிந்திருந்தும் கூட ஏன் நீ என்னருகில் வந்தாய்" என்றான். இன்னொருவன், 'அடே மலைப் பாம்பே எனது நண்பர்களையும் எங்கள் கன்றுகளையும் விழுங்கினாய்! என்னையும் நீ விழுங்கினாய். உன் வயிறு போதாமல் வெடித்து விட்டது. உன் உயிர் வெளியேறிப் போனது..." என்று நகைத்தான்.

ஸ்ரீகிருஷ்ணன், 'போதும் விளையாட்டு வாருங்கள் சாப்பிடலாம்.' என அழைத்துக் கொண்டு தடாகத்திலிருந்து வெளியேறினான். இன்று அனுமானித்தபடி கண்ணன் பலவிதமான உணவுவகைகளை காலையிலேயே தாய்மார்களிடமிருந்து வாங்கிவரச் செய்திருந்தான். இந்த வனம் வளம்நிறைந்த வாசமுள்ள மிகவும் உன்னதமான அழகைக் கொண்டது. ஸ்ரீகிருஷ்ணன் அமர்ந்தான். சுற்றிலும் கோபாலகர்கள் அமர்ந்தனர். தங்கள் உறியிலிருந்த உணவுக் கலயங்களை ஸ்ரீகிருஷ்ணனின் முன் வைத்தனர். இந்த வன போஜனம் தான் பிரம்மனை மோகம் கொள்ளச் செய்தது. அதனாலேயே ஸ்ரீ ஜீவ கோஸ்வாமி ''இந்நிகழ்வை பிரம்ம மோஹன லீலை'' என்கின்றார். மற்ற முந்தைய லீலைகளின் தலைப்பு பூதனை வதம், பகாசுர வதம் என்று பெயர் இருந்தது.

சிந்தாமணிக் கல் தனது ஒளியால் சுற்றிலும் பொன்மயமாக்கும். அதுபோல் பகவானின் புனிதமான கதையெனும் அமிர்தம் உயிர் உகக்கும். 'வனபோஜனம்' கண்ட தேவர்கள் தாங்களும் பறவைகள் வடிவில் வந்து, சிந்திக் கிடக்கும் உணவுத் துணுக்குகளாவது தங்களுக்குக் கிடைக்காதா என்று விளையாடினர். இவர்களின் விளையாட்டில் கன்றுகள் வெகுதூரம் தர்ப்பைக் காட்டுக்குள் சென்று விட்டன. கன்றுகளைக் காணாமல் கலங்கிய சிறுவர்கள் அவைகளைத் தேடி ஓடினர். ஸ்ரீகிருஷ்ணன் ஒருபுறம் தேடிச் செல்கின்றான்.

*சீலைக்குதம்பையொருகா தொருகாதுசெந்நிறமேல் தோன்றிய பூ*
கோலப்பணைக்கச்சும் கூறையுடையும் குளிர்முகத்தின் கோடாலமும்*
காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்*
ஞாலத்துப் புத்திரனைப்பெற்றார் நங்கைமீர் நானே மற்றாருமில்லை.

ஸ்ரீகிருஷ்ணன் சலிப்பில்லாமல் பல இடங்களிலும் கன்றுகளைத் தேடினான். அடர்ந்த காடுகள், மலைச்சரிவுகள், தூய்மையற்ற இடங்களிலும் கூடத் தேடியவன் மீண்டும் தனது நண்பர்கள் இருக்குமிடம் வந்தான். அங்கு அவர்களையும் காணாமல் ஸ்ரீகிருஷ்ணன் வருத்தமடைந்தான்.

அதி அற்புத குணங்களைக் கொண்ட ஸ்ரீகிருஷ்ணனின் 'கவனமின்மை' கூட வியப்பை வெளியிடுவதேயில்லை. வருத்தம் தான் கண்ணனுக்கு ''காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன்.'' பசுக்கள் இல்லாமல் ஸ்ரீகிருஷ்ணன் இல்லை. ஸ்ரீகிருஷ்ணன் இல்லாத பசுக்களுமில்லை. ஸ்ரீநிவாசனிடம் இல்லாத லட்சுமியா?

அம்மா யசோதா; ஏக்கமும் தவிப்பும் பாசமும் அவன் மீது தான் கொண்ட ஆனந்த உணர்வின் உயர்வை எல்லோரும் எதிர்நோக்க வேண்டும் என்கின்ற உன்னத எண்ணம் கொண்டவள். அந்த அம்மாவின் முன்னால் அவள் விரும்பியபடியல்லவா போக வேண்டும்! எங்கே சென்றன இந்தக் கன்றுகள்? தேடியலைந்து திரும்பிவந்து பார்த்தால் நண்பர்களையும் காணோம்! என்ன நிகழ்ந்தது? வன போஜனானந்தத்தில் யாருக்கு என்ன குறை! தங்களை இரையாக்கிக் கொண்ட அகாசுரன் வயிற்றிலிருந்து வெளியே வந்தோம்; அவனும் உற்ற கதி பெற்றான் ஆனந்தமாய்! அதனால் வனத் தடாகத் தாமரைகளுடன் தளும்பத் தளும்ப நீராட்டம்; நன்று! அடுத்து வனபோஜனம்! அதில் என்ன குறை! ம். சரி இது படைப்புக் கடவுள் வேலைதான்! நான்முகனுக்கு என்ன வேண்டுமாம்.? நிச்சயமாய் என்னிடம் பகைமையில்லை என்பதை நானறிவேன். அவர் விரும்பியது நிறைவுபெறட்டும். நானும் அவருக்கு இணங்குவது எனக்கொன்றும் நஷ்டமில்லை.

பிரேமமயமான லீலையின் ஆவேசத்திற் குட்பட்டு இந்த ஸ்ரீகிருஷ்ணன் சிலசமயம் பார்த்தும் பாராமுகமாய் போய் விடுவான்.

"நிச்சயம் இது பிரம்மாவின் காரியம்தான். அவர் விரஜபூமியின் நன்மையை நாடுபவர். நான்தான் கவனக்குறைவாக இருந்துவிட்டேன். எனது நண்பர்களுடன் என்னை மறந்து விளையாடிக் கொண்டு இருந்ததில் காரியத்தைக் கவனிக்கவில்லை." என்றெல்லாம் சிந்தித்த ஸ்ரீகிருஷ்ணன் நிதானமாக அடுத்தும் யோசித்தான்.

"பிரம்மனின் அறிவு. விரோத பாவத்தில் வேலைசெய்யவில்லை. எனது வைபவத்தைத் தரிசிக்க இந்த ஏற்பாடு செய்திருக்கின்றார். நிச்சயம் மாயையின் வைபவத்திலிருந்து விலகி இருப்பவர்கள் என்னை அறிந்தே என்னை வேறு ஒரு விரஜ மண்டல பூமியாகவே பாவிக்கின்றனர். இவ்வாறுதான் பிரம்மாவும் அதே விதத்தில் என் நண்பர்களையும் கன்றுகளையும் எனது வைபவத்திற்குள் மறைத்து வைத்திருக்கின்றார்."

வீணே கவலையுடன் நிற்பதைவிட அடுத்து விரைந்து செயல்பட வேண்டும். உறக்க நிலையிலும் கூட என் அறிவும் பலமும் விரோதிகளிடம் விழிப்புடன்தான் இருக்கு மென்பதை உணர்ந்த பிரம்மா எனது செயலை எதிர்பார்த்துக் கொண்டிருப்பார். மதிப்பிற்குறிய யோக மாயை எனக்கும் உதவி செய்வாள். அவளை நானும் நாடுவேன்! இதனால் விரஜத்தின் மக்களின் மந்தத் தன்மை மாறும். விரஜத்தின் மந்தம் மாறினால்தான் ஆனந்தம் உன்னத நிலையை அடையும்." ஸ்ரீகிருஷ்ணன் இவ்வாறு யோசித்து முடித்ததும் யோக மாயை ஓடோடி வந்து உதவினாள். அப்பொழுதே அதே நொடியில் கன்றுகளும், நண்பர்களுமாக குண ரூப ஸ்வரூபமாகினான்.

'யசோதா'விடம் என் குமாரன் என்று தோன்றிய ஆனந்தம் அவள் விரும்பியபடியே விரஜத்தின் தாய்மார்கள், பசுக்கள் அனைவருக்கும் கிடைத்தது. கோகுலத்தின் பிள்ளைகள் எல்லாம் ஸ்ரீகிருஷ்ணன். நடையுடை பாவனை எல்லாம் தோற்றத்தில் அவரவர் வீட்டுப்பிள்ளை. ஸ்ரீகிருஷ்ணன் தான் அவர்கள் பிள்ளைகளெல்லாம். இதற்கான ஏற்பாட்டுக்குத் தான் பிரம்மா இணங்கியிருக்கின்றார். பசுக்களும் தனது கன்றுகளிடம் மிகுந்த வாத்ஸல்யத்தை அனுபவித்தன.

முடிவு என்னவென்றால் அத்தனையும் பிரேமையின் வளர்ச்சி. ஸ்ரீகிருஷ்ண ரூபி நண்பர்களின் மற்றும் கிருஷ்ணரூபமான சகாக்களும் நிஜஸ்வரூபரான ஸ்ரீகிருஷ்ணரின் ரூபம், குணம், லீலைகள் கண்டு வியக்கின்றனர். மேலும் மேலும் கிருஷ்ணப்பிரேமை வளரப் பெற்றவர்களாகின்றனர்.

ஸ்ரீகிருஷ்ணன் கன்றுகள் மேய்ப்பதும், காலியனையும் மற்றும் தன்னைக்கொல்ல நாடி வந்த அத்தனை அசுரர்களையும் வதைத்ததும், கானகம் சேர்ந்து தனது நண்பர்களுடன் உண்டு களித்து விளையாடியதும், கோகுலத்து மங்கையர் அனைவருக்கும் அவரவர் விரும்பும் தரத்தில் பாசத்தை பக்தியாக வளர்த்ததும் அத்தனை செயல்களையும் பக்தர்கள் லீலைகளாகக் காண்பர். பக்தரல்லாதவர்கள் வேலையாகக் காண்பர். அவர்களைப்பற்றிய பேச்சுக்களை இங்கு கூறத் தேவையில்லைதான். நமக்கு என்னவாக ஸ்ரீகிருஷ்ணர் தெரிகின்றாரோ அதுவே நமது தரம் என உணரலாம்.

நான் எனக்குத் தெரிந்தபடி வாழ்ந்து கழிக்கின்றேன். புரிந்தபடி ஸ்ரீகிருஷ்ண கதைகளைக் கூறுகின்றேன். கேட்பவர்களில் பெரும்பாலோர் விபரீதமாகத் துன்பங்களை வாங்கிக் கொண்டிருப்பதையே காண்கின்றேன். யாரோ ஒரு சிலர் ஸ்ரீகிருஷ்ண கதைகளை உயிர் காக்கும் அமுதமாய் செவியாரப் பருகி அன்பை வளர்த்துக் கொள்கின்றனர். அவர்களின் எண்ணங்களால் நான் மீண்டும் மீண்டும் ஸ்ரீகிருஷ்ண கதாம்ருதத்தில் திளைக்கின்றேன். அவர்கள் பகவான் ஸ்ரீகிருஷ்ணரின் இந்த லீலையின்படி பிரம்மாவின் மோக வலையில் விழாமல் அவரை மோகிக்கச் செய்த நம் மோகன ஸ்யாம சுந்தரனின் வலையில் வீழ்வாராக.

பிருந்தாவனத்தில் இவ்விதம் ஓராண்டு ஆகியது. வனபோஜனத்தின் போது மறைக்கப்பட்ட கோபாலகர்களும் கன்றுகளும் ஸ்ரீகிருஷ்ணசந்திரனின் ரூபத்தில் திரிகின்ற ஒரு வருடம் முடிய இன்னும் நாலைந்து நாட்களே உள்ள நிலையில் 'பலராமன்' யோசனையாய் இருக்கின்றார்.

ஆரம்பத்திலிருந்தே அவர் இதே நிலையில்தானிருந்தார். அன்று அவர் வரவில்லையென்று செய்தி சொல்லியதும் அதேமாலையில் மேய்ச்சல் காட்டிலிருந்து வருகின்ற ஸ்ரீகிருஷ்ணனையும் சகாக்களையும் கன்றுகளையும் கண்டவர் வியந்தார்.

கிருஷ்ணன் நந்த கோகுலத்தில் எல்லோருடனும்; தன்னிலும் புதிய பரிணாமத்தில் கிருஷ்ண பிரேமை மிகுந்திருப்பதைக் கண்டு பலராமர் ஓராண்டு காலத்தில் இந்த 4,5 நாட்கள் கண்ணனுடன் காட்டிற்குச் செல்லவில்லை. ஆச்சரியத்திலிருந்த பலராமர் இப்பொழுது கண்ணனிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்தார். உண்மையை உணர்ந்தார்.

அவரால் இவர்களுடன் காட்டிற்குச் செல்லும் மன நிலையை ஏற்க முடியவில்லை. யாரிடமும் எதுவும் சொல்லவும் முடியவில்லை. எல்லோருடைய பிள்ளைகளின் வடிவத்தில் ஸ்ரீகிருஷ்ணனே இருக்கின்றதால் கோகுலம் முழுவதும் பிரேமைமயமாகி இருக்கின்றது மகிழ்ச்சிதான் எனினும் அந்த கோபாலகர்கள், கன்றுகளின் கதி! அண்ணனின் அவதி தம்பி கண்ணனின் மனதில் திட்டங்களைத் தீட்டியது. காட்டில் தனியே இருக்கும் ஸ்ரீகிருஷ்ணன் யோசித்தார். உடனே பிரம்மா அங்கு வந்தார். மறைந்து இருந்து கொண்டு ரகசியமாக தொலைவிலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார். ஸ்ரீகிருஷ்ணர் யோசித்தார். சதுர்முக பிரம்மன் இவர்தான், திருடர்தான் இவர். ஏனெனில் வருகின்றார். போகின்றார். எதிரில், பின்னால், இங்குமங்கும் பார்க்கின்றார். ஒவ்வொரு நாழிகையிலும் பயத்துடன் அலைகின்றார். இப்பொழுது என்னுடன் இருக்கும் நண்பர்களையும், கன்றுகளையும் ஐயத்துடன் பார்க்கின்றார். தானே திருடி வைத்திருக்கின்ற கோபாலகர்கள் கன்றுகள் எல்லாம் இங்கும் இருக்கின்றனவே! தன்னிடம் உள்ள பாலகர்கள்

கன்றுகள் இங்கிருப்பவற்றில் எந்த வேறுபாடும் இல்லாமல் சரியான ஒற்றுமையைக் கண்டவர் திண்டாடுகின்றார். அவருடைய சிறுமையான செயலை நினைத்து; நிலைகுலைந்து தெளிந்து பகவானைத் தியானித்தார். பகவான் அவர் முன் வந்து நின்றார். பார்க்கின்றார்.

பிரம்மனைக் கண்டதும் ஸ்ரீகிருஷ்ண ருக்கு தனது உற்ற தோழன் 'ஸ்ரீதாமா' மற்றும் பிற நண்பர்கள் அனைவரையும் உடனே காண வேண்டும் என்று விரும்பினார். அழைத்து வந்தபின்பு பிரம்மாவைக் கவனித்துக் கொள்ளலாம் என்று நினைத்தார். அவரது எண்ணம்போலவே கோபாலகர்களும் கன்றுகளும் அங்கே இயல்பாக தோன்றினர். இவரது வடிவங்கள் எல்லாம் மறைந்து கொண்டன. இவ்விதம் பலவகையான வைபவங்களைத் தரிசித்தவர் தாபம் கொள்ளலானார். வெட்கமுற்றார். அவரது மனதில் பணிவு ஏற்பட்டது. ஸ்ரீகிருஷ்ணரை வணங்கினார் நான்முகம் கொண்ட பிரம்மா. ஒரு தலையில் வணங்கினார். அமைதியிழந்தார்.

பிரம்மன் தான்வணங்கியது கிருஷ்ணனுக்கு திருப்தியைத் தரவில்லை. வெட்கமடைந்தார். ஒரு தலை நிமிர்ந்து ஸ்ரீகிருஷ்ணரின் முகதரிசனம் கிடைத்ததை எண்ணி ஆனந்தம் கொண்டார்.

தன்னிலும் உயர்வாக மதிக்க வேண்டிய பகவானின் அடியவர்களைக் கவர்ந்து சென்றதை நினைத்து வருந்தினார். பிராயச் சித்தமாக ஸ்ரீகிருஷ்ணனையே வணங்கினார்.

கோகுலத்தில் எத்தகையபிறவி கிடைத்தாலும் பாக்கியமேயாகும். இந்த பூமி ஸ்ரீகிருஷ்ணரின் அடியவர்கள் பாததூளி நிரம்பியது. கோகுலவாசிகளுக்கு பகவானான ஸ்ரீகிருஷ்ணனே அகில ஜீவன் ஸ்வரூபமாவார். அவருடைய திருவடிமண்ணை இன்றும் வேதங்களனைத்தும் துதிக்கின்றன. பகவானை பிரம்மாவின் கவிவடிவிலான பிரார்த்தனை 'ஸ்ரீபிரம்ம ஸம்ஹிதை' என்று வழங்கி வருகின்றது.

பிரம்மாவின் துதிகளால் தனது பாலகர்கள், கன்றுகள் எல்லா ரூபங்களையும் மீண்டும் தனதாக்கிக் கொண்ட ஸ்ரீகிருஷ்ணர் அவரிடம் ஒன்றும் சொல்லாமல் சிரித்தவாறு பார்த்துக் கொண்டேயிருந்தார். அவரது புன்னகை பிரம்மாவிடம்,“ நாங்கள் ஆயர்கள் எல்லா தாத்பரியங்களையும் அறிவோம். ஆனால் நீங்கள் பிரம்மாவாக இருந்தும் அனர்த்தம் செய்பவர் ஆகிவிட்டீர்கள். ” என்று சொல்வது போல் எண்ணிய பிரம்மன் செய்வதறியாது திகைப்புடனிருந்தார். பிரம்மா கரம் குவித்து வணங்கினார். இப்பொழுதும் ஸ்ரீகிருஷ்ணர் மௌனமாக இருந்தார். பரமதயாளரான ஸ்ரீகிருஷ்ணர் எளிய மனம் கொண்ட தன்னைத் தவிர வேறேதும் அறியாத பக்தர்களின் பிரேமையின் வசமானவர்.

ஸர்வவிஜயீயான ஸ்ரீகிருஷ்ணன் வ்ரஜபாலகர்களும் கன்றுகளும் திரும்பி வர வேண்டும் என்று விரும்பினார். ஸ்ரீகிருஷ்ணனின் சங்கேதத்தை உணர்ந்த பிரம்மா பாலகர்களையும் கன்றுகளையும் திரும்பி அழைத்து வர அனுமதி வேண்டினார். உடனே ஸ்ரீகிருஷ்ணர் குதூகலத்துடன் கேலியாகச் சிரித்தவாறு,“தங்களின் ஆணை அதுவானால் எனது நண்பர்களையும் கன்றுகளையும் நான் முதலிலேயே சென்று அழைத்து வந்திருப்பேனே!'' என்றார். பிரம்மாவின் நான்கு தலைகளும் குனிந்தன. மௌனமாக பரமாத்மாவின் லீலைகளில் மனம் லயிக்க கண்களில் கண்ணீர் வழிய ஸ்ரீகிருஷ்ணனின் முன் வணங்கினார். மும்முறை வலம் வந்தார். விடைபெற்றார்.

தனது கோபாலகர்களையும் கன்றுகளையும் அதே மனச் சமாதானத்துடன் சேர்த்துக் கொண்டார். அவர்கள் ஏதும் அறியவேயில்லை. ஒரு சில நொடிகளில் நிகழ்ந்தது போல் உணர்ந்தனர். “ கிருஷ்ணா........ நீயில்லாமல் நாங்கள் சாப்பிடவேயில்லை. வா சாப்பிடலாம்.” என்றழைத்தனர். அவர்களின் கன்றுகளைத் தேடி ஸ்ரீகிருஷ்ணனே கண்டு பிடித்துக் கொண்டு வந்ததாகவே எண்ணினர். ஸ்ரீகிருஷ்ணனும் சிறுவர்களும் சிரித்து விளையாடிக் கொண்டே சாப்பிட்டனர்.

இன்று ஸ்ரீகிருஷ்ணன் மயிலிறகு, கானகத்துப் பூக்கள் மகரந்தங்கள் முதலியவற்றால் அதிசயமாக அலங்கரிக்கப்

பட்டிருந்தார். பிரிய சினேகிதர்களின் பிரேமையில் கன்றுகளுடன் மாலையில் வீட்டிற்குத் திரும்பினார். ஒவ்வொரு கோபாலனும் அவரவர் வீட்டில் இன்று தான் நடந்ததுபோலவே அகாசுரன் வதைக்கப்பட்டதை பேராவலுடன் விவாதித்தனர்.

"இன்று நந்தலாலா மலைப்பாம்பைக் கொன்று எங்களைக் காப்பாற்றினான்" என்று பாடினர். ஸ்ரீகிருஷ்ணன் காலையில் ஸ்ரீபலராமரிடம் சென்று அன்புடன் பேசி அண்ணனின் மதிப்பு மிகுந்த புன்னகையைப் பெற்றார். மறுநாள்முதல் மீண்டும் அண்ணனுடன் கானகம் செல்லத் தொடங்கினார்.

வந்தனைக்குரிய படைப்புக்கடவுள் பிரம்மனும் பாமர பக்தனைப் போல ஆன கதை. நம்மையும் பக்தர்களாக்கட்டும்.

......................................................

## ஸ்ரீ பிரம்ம ஸம்ஹிதை

முழுமுதற் கடவுள் ஸ்ரீகிருஷ்ணரின் அம்சமாகிய ஸ்ரீசைதன்ய மஹாபிரபு தமிழ்நாட்டு விஜயத்தின்போது திருவட்டாறு ஆதி கேசவப் பெருமாள் திருக்கோயிலில் ''ஸ்ரீ பிரம்ம ஸம்ஹிதை'' நூலின் ஐந்தாவது அத்தியாயத்தினைக் கண்டுபிடித்தார். பிரம்மா ஸ்ரீகிருஷ்ணரை நேரில் கண்டு அவர்முன் பாடிய பழம் பெரும் காவியம் ஸ்ரீ பிரம்ம ஸம்ஹிதை பல யுகங்கள் கடந்து இக்கலியுகத்தில் ஸ்ரீ சைதன்ய மஹாபிரபுவால் கண்டறியப்பட்டது. கலியுகத்தில் கடவுளை அறியக் கிடைத்த ஞானப் பொக்கிஷமாகும். கடவுள், அவரது இருப்பிடம் மற்றும் இயக்கம் பற்றிய விவரங்களுடன் ஆன்மிக உலகின் எல்லா தகவல்களும் அடங்கியது. அதிகாரப் பூர்வமாக கடவுளால் அங்கீகரிக்கப்பட்ட நூல்.

ஸ்லோகம்-1

ஈஸ்வர பரம கிருஷ்ண சத்சித் ஆனந்த விக்ரஹ
அனாதிர் ஆதிர் கோவிந்த ஸர்வ காரண காரணம்

பகவான் ஸ்ரீகிருஷ்ணரே எல்லா உலகங்களுக்கும் பரமமான ஈஸ்வரனாகவும், காலங்களால் கணக்கிட முடியாத ஆதி கோவிந்தனாகவும் நித்ய சத்ய இன்ப வடிவாகவும், எல்லா காரணங்களுக்கும் மூல காரணமாகவும் இருக்கின்றார்.

ஸ்லோகம்-29

சிந்தாமணி-ப்ரகர-ஸத்மஸு கல்பவ்ருக்ஷ
லக்ஷாவ்ரதேஷு ஸுரபிர் அபிபாலயந்தம்
லக்ஷ்மி-ஸஹஸ்ர – சத – ஸம்ப்பரம-ஷேவ்யமானம்
கோவிந்தம் ஆதி – புருஷம் தம்அஹம் பஜாமி.

'சிந்தாமணி' எனும் கற்கள் சுயமான ஒளியும் வலிமையும் உள்ளவைகள். இவைகளின் ஒளி படும் இடமெல்லாம் பொன்மயமாகும். நாமறிந்த உலோகமாகாது. சுயபிரகாசமும் வலிமையும் உள்ள உன்னத மூலக்கூறுகளாகும் என்பது. இத்தகைய கற்களால் பிரகாரங்கள் கட்டப்பட்டுள்ளதாகவும், வேண்டியவற்றை வழங்கும் கற்பக மரங்கள் நிறைந்ததுமான கோலோகத்தில் பால்வளம் மிக்க சுரபிப்பசுக்கள் லட்சக்கணக்கில் இருக்கின்றன, அவைகளை பேணிப் பாதுகாக்கும் வேலையில் இருக்கும் ஸ்ரீகிருஷ்ணரின் சேவையில் ஆயிரக்கணக்கான லஷ்மிதேவிகள் ஈடுபடுகின்றார்கள். இவர்தான் கோவிந்தனாகிய ஆதி புருஷர். அவரை நான் எப்பொழுதும் வணங்கிக் கொண்டிருக்கின்றேன்."

இவ்வாறாக பிரம்மாவின் துதிகள் 62 ஸ்லோகங்களாக உள்ளன. இந்த நூலில் பிரம்மா வருணிக்கின்ற கடவுள் தன்மையை அவர் புரிந்துகொண்டதாலேயே அவர் படைக்கும் தொழிலின் கடவுளாகியிருக்கின்றார்.



# நா மலர்ந்த பூக்கள்

ஸஞ்சயன் கூறியது:

வியாஸ பகவானுடைய அருளால் இரகசியங்களுக்குள் உத்தமமான இரகசியமான இந்த யோகத்தை யோகேசுவரனான கிருஷ்ணன் சொல்லிக்கொண்டிருக்கும்போதே நான் கேட்டேன்.

– கீதையில் 18:75.



நா மலர்ந்த பூக்கள். இவைகள் வலிமையானவைகள். தெய்வீகமான ஆயுதத்திற்கு ஒப்பானவைகள். இதழ்களின் மென்மையால் மூலாதாரத்திலிருந்து உதிர்ந்து விடுவதில்லை, நினைவில் வடுவாகின்றதால் வண்ணம் வெளிர்வதில்லை. செயலாற்றுவது சுகமாகவும் சுலபமாகவுமிருக்கின்றது. எனவே வாசம் குறையாமல் கூடுகின்றது. நாம் வழங்கும் வார்த்தைகளே மலராகவோ முள்ளாகவோ (மாறாதிருந்து) வாடாதிருந்து வாழ்நாள் முழுமைக்கும் ஆதாரமாகின்றதே!

பள்ளியில் ஆசிரியர்கள் பேசியதும், நாம் நண்பர்களுடன் பேசியதும், வீட்டிலும் உறவினர்களிடமும் கொஞ்சியதும், கெஞ்சியதும், அரண்டதும், மிரண்டதும், அரற்றியதும், அழுததுமாக ஒவ்வொரு நாளும் எத்தனை உணர்வுகள்? அத்தனையும் ஈரமில்லாத இதழ்களுக்குள் நா இருந்து தந்த வார்த்தைப் பூக்கள். அதன் வலிமையினால் வாழ்வை அமைத்துக் கொண்டோமோ? சிதைத்துக் கொண்டோமோ! விதியே என்று கடந்து வந்தோமோ? காணாமல் போன காய்ந்த பூக்களைக் கண்டுபடித்தால் கனவில் வாழ்ந்தோமா, கடனாய் வாழ்ந்தோமா என்பது நிச்சயம் புரியும்.

செத்ததின் வயிற்றில்
சிறியது பிறந்தால்
எத்தைத் தின்று எங்கே கிடக்கும்?
அத்தைத் தின்று அங்கே கிடக்கும்!

புலனிந்திரியங்களுக்காக மட்டுமே அறிவையும் மனதையும் பணி செய்யவைத்து வாழ்பவன் செத்தவனுக்கு ஒப்பானவன்தான். ஆன்ம உணர்வில்லாத தேகம். அது தின்பது ஐம்புலனிற்கான தீனி மட்டுமே! அதன் வயிற்றில் பிறக்கும் இன்னுமொரு சிறிய தேகமும் அது தோன்றிய பெரிய தேகம் எவ்வகைப் புலனுகர்வு தீவனம் எடுத்துக்கொண்டதோ அவ்வாறே தானும் செய்து அதைப் போலவே தன் தேகத்தை தானே தின்னும். இவ்வாறான பொருளில் மதுரகவியாழ்வார் நம்மாழ்வார் இருவரும் ஜீவன்களின் கர்மேந்திரிய தேக வாழ்வினை வருத்தமுடன் பேசிக் கொண்டனர்.



ஆழ்வார்களில் நம் ஆழ்வார் என்று பகவான் தனது ஆழ்வார் என்று குறிப்பிட்டது

மட்டுமல்லாமல் ஒவ்வொரு 'திவ்ய தேசத்திற்கும் '' மங்களாசாசனம்'' நம்மாழ்வார் இருக்குமிடத்திற்கு அந்தந்தப் பெருமாளாகவே வந்து வாங்கிக் கொண்டனராம். எவ்வகையிலாவது ஜீவர்கள் கடைத்தேற காலத்திற்கு தகுந்தபடியும் அவர்களின் தாரதம்யத்திற்கு தகுந்தபடியும் பகவான் தனது பிரியபக்தர்கள் மூலமாக அஞ்ஞானம் அகல்விக்கும் அறிவுச் சுடர்களை வழங்கிய படியேதானிருக்கின்றான்.

தாயாரே நேரில் மானிடப் பெண்ணாக வந்து ஆழ்வார்கள் மத்தியில் இடம் பிடித்துக் கொண்டாள். திவ்ய பிரபந்தத்தில் ஆண்டாள் நாச்சியார் பாடல்களில் மாதவனாய் இருக்கும் மார்கழியின் மகத்துவம் பாடினாள். எத்தனையாயிரம் காலங்களானாலும் கதவு திறந்தேயிருக்கின்றது; ஜீவர்கள் விடுதலை பெறவும் பக்திபரவசத்தை அனுபவிக்கவும் நிலைத்த அனுமதியாக.

"கோயில் காப்பானே கொடித்தோன்றும் தோரண வாயில் காப்பானே மணிக்கதவம் தாழ் திறவாய் என்று இன்றும் நமக்கு முன்னால் நம் தாயாரே நிற்கின்றாள்".

'வைகுண்டம்' விட்டுப் பூமிக்கு 'பக்தி' அனுபவிக்க அவள் மட்டும் சென்றாளே! பக்தியெனும் உன்னத ஆனந்தம் தாமும் உகந்துதான் பார்க்கலாமேயென்று கலியுகத்தில் வந்தான் கண்ணன். தனது ராதையின் பிரேமையைத் துணைக்கழைத்துக் கொண்டு!

நாம் நாம் அகாரி பஹுதா நிஜ ஸர்வ சக்திஸ்
தத்ரார்ப்பித நியமித: ஸ்மரணே ந கால:
ஏதாத் ருசி தவகிருபா பகவந் மமாபி
துர்தைவம் ஈருஸம் இஹா ஜநி நஜ அநுராக:

பதீத பாவன லீலைகளால் பகவானுக்கு அநேக நாமங்கள். அத்தனையும் சொல்லச் சொல்ல எல்லையில்லாமல் பல்கிப் பெருகியவாறு வருகின்றன. ஒவ்வொரு நாமத்திலும் பூரணமான அதே தெய்வீக ஆற்றல் நிறைந்திருக்கின்றன.

எம்பெருமானே! ஒரே ஒரு நாமத்திலும் உங்களது முழு ஆற்றலும் உள்ளதென்றால் அதையே சொல்லிச் சொல்லி நினைத்து தங்களை விடுவித்துக் கொள்ள ஜீவனுக்கு எந்த ஒரு கட்டுப்பாடும் இல்லை. காலநேரம் எனும் தடைகளும் இல்லை. இன்னார்தான் சொல்லவேண்டும் என்கின்ற தகுதிதேடும் அனுமதி வேண்டியதுமில்லை. யார் வேண்டுமானாலும் எங்கு வேண்டுமானாலும் எப்பொழுது வேண்டுமானாலும் நாவாரப்பாடி மனதார சிந்தித்து தெய்வீக ஆனந்தம் பெறலாம். சம்சார சுழலிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள அதிர்ஷ்டமிருந்தும்; உங்கள் நாமத்தின் ருசியை அறியாத துரதிர்ஷ்டம் உள்ளவனாக நானிருக்கின்றேனே!

ஒரு பாமரன் பக்தனாக ஏங்கியே முயன்று தூய பக்தனாகின்ற வடிவை நமக்காக ஏற்று ஸ்ரீகிருஷ்ண சைதன்யராக அவதரித்தார் நம் பெருமான் . இது இக்கலியுகத்தில் ஐநூறு ஆண்டுகளுக்கு முன்பு பகவான் ஸ்ரீகிருஷ்ண சைதன்யர் வழங்கிய ஹரிநாம ஸங்கீர்த்தன யக்ஞும் தான் தமிழ் வேதமாகிய திவ்ய பிரபந்தத்தின் நாலாயிரம் பாசுரங்களும் பகர்கின்ற "பக்தி".

பகவான் அவரது ஆபரணங்களும், ஆயுதங்களும், அடியார்களும், தானுமாகச் சேர்ந்து கொண்டு ஜீவர்கள் மரணப் போராட்டத்தில் வெற்றி பெற வேண்டுமென்று உற்றதுணையாக இருக்கின்றனர். மரணத்தை வெல்லும் வழியாக வாழ்வு முறையுடன் வாழ்ந்து வெல்வது ஒரு வகை! மற்றொரு வகை ஒட்டுமொத்தமாக இப்பூலோக உடல்வாழ்வை மறுப்பது. இது கடினமானது. சாமான்யர்களால் இயலாதது.

ஆழ்வார்கள் காட்டிய வழியே சிறந்தது. எம்பெருமான் 'தசாவதாரம்' எடுத்தும் தனது அன்பின் ஆற்றலை மக்களோடு மக்களாக உடனிருந்து வழங்கினால்தானே அவர்களுக்கும் பக்திச் செயல்கள் மீது பற்று வரும்.

பகவானது ஆயுதங்களும், நித்ய சூரிகளும் இப்பூமியில் பன்னிருவராக அவதரித்தனர். உலகியல் மக்களுடன் வாழ்ந்தாலும் உடல் பற்றில்லாமல் ஆன்ம நேயத்துடன் பெருமானின் கல்யாண குணங்களைப் பாடி பகவானது அருளே

இன்பமெனும் வகையில் வாழ்ந்து காட்டினர்.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் சமகாலத்தில் அவதரித்தவர்கள். நண்பர்களாக வாழ்நாள் முழுவதும் பகவான் ஸ்ரீமந்நாராயணன் நாமம் போற்றினர்.

நம்மாழ்வாரும், மதுரகவி ஆழ்வாரும் அவதரித்து குரு சீடனாக வாழ்ந்து பகவத் பிரேமையை வளர்த்தனர். ஸ்வேதத்வீபத்தில் உள்ளது திருப்பாற்கடல். ஸ்ரீமந்நாராயணரை தாயாருடன் ஆதிசேஷனில் பள்ளிகொண்ட நிலையில் அருகில் சென்று நித்தியம் சேவிக்கும் தகுதியுடையவர் நித்யசூரிகள். அவர்களுக்கு தலைமை வகிப்பவன் குமுதன். இவர் மதுரகவியாழ்வார். திருக்குறுங்குடி பகவான் நாராயணன் நம்பி நம்மாழ்வார்.

மாமன்னர்களாக வாழ்ந்து பக்தி நெறியை பரப்பியவர்கள் சேரநாட்டு மன்னர் குலசேகர ஆழ்வாரும், ஸ்ரீரங்கம் சீரமைத்த திருமங்கை ஆழ்வாரும் ஆவர்.

தொண்டரடிப் பொடியாழ்வாரும், திருப்பாணாழ்வாரும், பகவானாலேயே ஆட்பொள்ளப்பட்டு ஆழ்வார்களாயினர்.

ஸ்ரீமதி ஆண்டாள் நாச்சியார் மகளாகவும், பெரியாழ்வார் தந்தையாகவும் அவதரித்து கண்ணன் காதலில் அன்னை யசோதையின் அன்பையும் கோபியர்கள் பக்தியையும் பறைசாற்றினர்.

ஆழ்வார்கள் பாசுரங்களில் இவர்கள் பாசுரங்களே தொடக்கமாக பாடப்படுகின்றன.

'திருமழிசையாழ்வார்' பிற எல்லா சமயங்களிலும் ஈடுபட்டு பெருமான் அருளால் வைஷ்ணவத்திற்கு வந்தவர். திருமயிலையில் சிவ வாக்கியர் எனும் சித்தராக இருந்தவர். அங்கு வாழ்ந்த வைணவப் பெருந்தகை பேயாழ்வாரின் சீடராகியவர். அவர் அவதரித்த திருத்தலத்தின் பெயரால் திருமழிசையாழ்வார் என அழைக்கப் பட்டார்.

பன்னிரு ஆழ்வார்கள் வழங்கிய வார்த்தைப் பூக்கள் நாலாயிரமும், பகவான் நாவினில் மலர்ந்த கீதை மலர்களும் அவரவர் நாவினால் நவின்றால் நமனது கயிற்றுக்கும் நமக்கும் சம்பந்தமில்லாமல் போய்விடும்.

உற்றதொரு உறுதுணையாக பூத்த மலர்கள் நாலாயிரமும் நம் வாழ்விற்கு வலிமை சேர்ப்பவைகள். தொகுத்தளித்த பேராசிரியர் நாதமுனிகள்.

பண்டைய தமிழகம் மூவேந்தர்களால் ஆளப்பட்டிருந்த காலம். நாத்திக அறிவிலிகள் தோன்றாத கள்ளமில்லாத் தமிழகத்தில் சோழநாட்டில் காட்டுமன்னார்குடிக்கு அருகில் வீரநாராயணபுரம் எனும் வைணவத் திருத்தலம். இங்கு கோயில் கொண்டுள்ள எம்பெருமானுக்கு தொண்டுபுரிந்து வாழ்கின்றவர் ஈஸ்வரபட்டர். இவரது திருக்குமாரர்தான் நாதமுனிகள். ஸ்ரீமந்நாதமுனிகளும் தனது தந்தையின் வழியில் ஸ்ரீநாராயணரின் தொண்டில் முழுமையாக தன்னை அர்ப்பணித்து வாழ்ந்து வந்தார். சோழர்கள், பாண்டியர்கள், சேரர்கள் என்று ஆள்பவர்களால் ஆன்மீகம் தழைத்து ஓங்கிய தெய்வீகத் தமிழகமாக அன்று விளங்கி இருந்தமையால்; இன்றும் நம் முன்னோர்கள் அமைத்துத்தந்த வைணவ, சைவத் திருக்கோயில்கள் நம் கடவுள் கலைகளின் சரணாலயமாக இருக்கின்றன. இன்று அற்பர்களும் கூட ஆலயங்களையும், அவற்றின் தொண்டர்களாலுமே தான் தங்களை ஆட்சியாளர்களாகக் காட்டிக் கொள்கின்றனர். கூத்துமேடை ராஜாக்களால் நம் தமிழகம் தன்நிலை இழக்கவில்லை. கள்ளழகர், மீனாட்சி சொக்கநாதர் திருவிழா தருகின்ற தெய்வீகத் திருவிளையாடல்களில் ஆழ்வார்களும் நாயன் மார்களும் நம்மோடுதான் வாழ்கின்றனர்.

நாதமுனிகள் தொண்டாற்றி வந்த வீர நாராயணபுர பெருமானைச் சேவிக்க மேலக் கோட்டை திருநாராயணபுரத்திலிருந்து சில வைணவர்கள் வந்திருந்தனர். அவர்கள் நம்மாழ்வார் திருவாய்மொழி ஐந்தாம் பத்து எட்டாம் திருவாய்மொழி பத்துபாசுரங்களைப் பாடினார்கள். அதில் முதல் பாசுரம்

ஆராவமுதே! அடியேனுடலும் நின்பாலன்பாயே*

நீராயலைந்து கரைய உருக்குகின்ற நெடுமாலே!*

சீரார் செந்நெல்கவரிவீசும் செழுநீர்திருக்குடந்தை*

ஏரார்கோலம் திகழக்கிடந்தாய்! கண்டேன் எம்மானே!

எனத் தொடங்கிய நம்மாழ்வார் பாசுரங்களின் 'பக்தி'யெனும் பேரானந்த நிலையை கலியுகத்தில் கண்ணன் தானே வந்து வாழ்ந்து நமக்கமுது ஊட்டினான்.

அழுவன்தொழுவனாடிக்காண்பன் பாடியலற்றுவன்*

தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன்*

செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய்! செந்தாமரைக்கண்ணா!*

தொழுவனேனைஉனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய்.

ஆடிப்பாடிக் கதறுவேன் என்கின்றார் நம்மாழ்வார். பகவானும் ஸ்ரீகிருஷ்ண சைதன்யராக வந்து அதை அப்படியே செய்தான்.

'நம்மாழ்வார்' பாண்டிய நாட்டில் தாமிரபரணி நதிக்கரையில் உள்ள திருக்குருகூர் என்னும் திருத்தலத்தில அவதரித்தவர்; முப்பத்து ஆறு திவ்ய தேசங்களின் பெருமானைப் பாடியிருக்கின்றார். இவரது பாசுரங்கள் மொத்தம் ஆயிரத்து இருநூற்றிதொண்ணூற்றாறு பாசுரங்கள். நம்மாழ்வார் நா மலர்ந்த பூக்களில் பத்து மட்டும் காவிரி தொடங்கும் திருநாராயண புரத்து வைஷ்ணவர்கள் வசமாகி அவர்கள் சோழநாட்டு காட்டுமன்னார்குடி வீரநாராயண புரம் வந்து பாட அதுகேட்ட நாதமுனிகள், ''அடியேனுக்கு அத்தனையும் சாதிக்க அருளவேண்டும்" என்று விண்ணப்பிக்கின்றார். அவ்வைஷ்ணவர்கள், "ஆராவமுதே!" எனத் தொடங்கிய பாசுரங்களின் பத்தாவதில்

குழலின்மலியச் சொன்ன ஓராயிரத்துள்இப்பத்தும்*

மழலை தீர வல்லார் காமர்மானேய் நோக்கியர்க்கே.

என்று முடித்தவர்கள்; இதில் சொல்லியிருக்கும் "ஆயிரம்" நாங்கள் அறியவில்லை. இந்தப் பத்துப்பாக்கள் மட்டுமே அறிவோம்" என்றார்கள்.

ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கினார் நாதமுனிகள். மீண்டும் மீண்டும் மேலக்கோட்டை வைஷ்ணவர்கள் பாடிய பாக்களில் மனம் லயித்திருந்தவர்; "குருகூர்சடகோபன் குழலின் மலியச் சொன்ன" என்கின்ற வரியினால் குருகூர் சென்று கண்டறியலாம் எனத் தீர்மானித்தார். 'நம்மாழ்வார்' அவதரித்த திருக்குருகூரை (இன்று ஆழ்வார் திருநகரி) வந்தடைந்தார். இவ்வூர் வைணவர்கள் மதுரகவியாழ்வார் பரம்பரையில் உதித்த பராங்குசதாசருக்குத் தெரிந்திருக்கலாம் என்று வழிகாட்டினர்.

நாதமுனிகளும் பராங்குசதாசரை அணுகி தான் வந்த நோக்கத்தை விண்ணப்பிக்கின்றார்.

அவரோ! "நானறிந்ததெல்லாம் மதுரகவி யாழ்வாரின் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' என்னும் பதினொரு பாசுரங்கள் மட்டுமே!" என்று பதிலு ரைக்கின்றார். மேலும் பராங்குசர் நாதமுனிகளிடம் " 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' பதினோரு பாக்களையும் 12 ஆயிரம் தடவை நம்மாழ்வார் முன்பு சேவித்தால் நம்மாழ்வார் காட்சி தருவார்'' என்றும் கூறினார். நாதமுனிகளுக்கு அளவிலா மகிழ்ச்சி.

நம்மாழ்வார் வாழ்ந்திருக்கும் திருப்புளிய மரத்திற்குமுன்பு வந்தமர்ந்தார். முறைப்படியாக அனுட்டானங்களைச் செய்தார். 12 ஆயிரம் தடவை 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' பதினோரு பாசுரங்களையும் சேவித்தார். 'நம்மாழ்வார் எழுந்தருளினார்.'

''தம்மை வேண்டியது என்ன'' என்று நா மலர்ந்தருளினார்.

நாதமுனிகள் நம்மாழ்வாரிடம் பக்திப் பெருக்குடன், தமக்கு திவ்ய பிரபந்த பாசுரங்களை அருளும்படி பிரார்த்தித்தார்.

நம்மாழ்வாரும் தான் அருளிய திருவாய்மொழி உட்பட ஆழ்வார்களின் மற்ற பாசுரங்களையும் மொழிந்தருளினார்.

நாதமுனிகள் பிரபந்த பாசுரங்களை பட்டோலையில் முறைப்படுத்தி பத்திரம் செய்து வைத்தார்.

நம்மாழ்வார் அருளிச் செய்து நாதமுனிகள் பெறப்பட்டவைகள் என்பதால்

அருளிச் செயல்கள் என்று பெயராகியது. இவரிடமிருந்து உய்யக் கொண்டார் மணக்கால் நம்பி வழியாக ஆளவந்தர் அவர்களிடம் வந்தவைகள்; அவரது வழியில் வந்த ஆச்சார்யர்கள் மூலமாக இன்று நமக்குக் கிடைத்திருக்கின்ற திவ்யபிரபந்தம் எனும் ஆழ்வார்களின் நா மலர்ந்த பூக்களுடன் கீதையெனும் பகவான் நா மலர்ந்த பூக்களும் சேர்ந்து வைராக்கியம் நிறைந்த பகவத் பிரேமமயமான வாழ்வுக்கு வேண்டிய அகப் பொருளும் புறப்பொருளும் அருளும்.

துவாபர யுகத்திலிருந்து தொடர்ந்து வரும் 'பகவத் பிரேமை' என்கின்ற வாஞ்சையுள்ள மலர்கள் கலியுகத்தில் நாலாயிரம் சாதித்தவர்களுக்கு தானே முன்னின்று வழிகாட்ட காக்கும் கடவுள் கலியுகத்தில் வந்தவதரித்தது ஸ்ரீகிருஷ்ண சைதன்யராக!

மஹாபிரபு வருகைக்கு முன்பே வந்து சாளகிராம பெருமாளிடம் விண்ணப்பித்து பக்த அவதாரமாய் பகவானை வரச் செய்து உடனிருந்து பக்தித் தொண்டாற்றியவர் பிரம்மனின் அம்சமான ஸ்ரீஅத்வைத ஆச்சார்யர். இராதாராணியின் அம்சத்தில் கதாதரரும்,பலராமர் ஸ்ரீநித்யா னந்தராகவும், ஸ்ரீவாஸ் பண்டிட்டாக நாரத மகரிஷியும் அவதரித்தனர்.



தொடர்ந்து பாக்களாகிய பூக்களை நா மலர நாரயணனே நமக்கே பறை தருவான்



## ஸ்ரீநம்மாழ்வார்

'கண்ணிநுண் சிறுத்தாம்பு' பாடிய மதுரகவியாழ்வார் அயோத்திக்கு திவ்ய யாத்திரை செல்கின்றார். தென்வானில் ஒளிப்பிழம்பு கண்டு வியந்தார். நம்ம ஊருப்பக்கம் அல்லவா வான் ஒளி திகழ்கின்றது என்று திரும்பி வருகின்றார். 'ஆழ்வார் திருநகரி' புளியமரத்தில் நம்மாழ்வாரைக் காண்கின்றார். நம்பெருமான் இவர்தான் எனக் கருதி; தனது பாக்கியமே சடகோபரின் தொண்டனாக வாழ்வதுதான் என வாழ்ந்தார்.

சடகோபர் தெள்ளுதமிழ் பாசுரங்களைச் சொல்லச் சொல்ல பட்டோலையில் எழுதினார் மதுரகவியார்.

யாதொரு திவ்ய தேசங்களைப் பாடாமலும், வேறு எம்பெருமான் சேவையில் இல்லாமல் நம்மாழ்வாரையே சரணடைந்த குருபக்தியினால் இவர் பாடிய பதினொரு பாசுரங்கள் 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' நாலாயிர திவ்யபிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளது சிறப்பு.

நம்மாழ்வார் பரமபதம் எய்தபின்பு அவரது திருவுருவச்சிலையை திருக்குருகூரில் வடிவமைத்து உற்சவங்களை ஏற்படுத்துவதும் நம்மாழ்வார் பாசுரங்களை பாடிப் பரப்புவதும் முழுமூச்சாகக் கொண்டிருந்தார். நம்மாழ்வார் பாசுரங்கள் பிரபலமடைவதைக் கண்ட மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர்கள் சங்கப்பலகையில் அவைகளை ஏற்கச் செய்தால் நாங்கள் ஏற்போம் என்றனர்.